49

உ

ஸ்ரீ வாணீசகாயம்.

# கலைமகள்.

புதுவைக் கலைமகள் கழகத்தினின்றும் வெளிவரும்

மாதாந்தப் பத்திரிகை.

வித்தைவிரும்பு. கேள்விமுயல். வீடுபேறுநில்.

வெண்டாமரை ௪. | 1916-ம் ஆ மார்ச் ௴ | இதழ் ௩.

## இலௌகிகப் பகுதி.

### பொருட் கொத்து.

**அடக்கமுள்ள மனிதன்.**

பிரான்சு தேசத்தில் ஒரு சிற்றூரிலுள்ள பாங்கி (பெரிய பாங்கின் கிளை ஆபீஸ்) ஒன்றில், கடந்த டிசம்பர் ௴ 3-ம் தேதியன்று காலை 10 மணிக்கு, கதவு திறக்கப்பட்டதும், ஒரு மனிதன் உள் நுழைந்தான். அவன் சாதாரண உடைதரித்து ஒரு சாமானிய மனிதனாகவே காணப்பட்டான். அவனைக் கண்டதும் அங்கு வேலைபார்த்துக்கொண்டிருந்த ஒரு உத்தியோகஸ்தன் அவனை இலேசாக மதித்து, "என்ன வேண்டும்?" என்று வினவ, அவன், "சண்டைக்காக கவர்ன்மெண்டாருக்குச் சகாயக் கடன் பணம் கொடுக்க வந்தேன்" என்றான். "எவ்வளவு கொடுக்க வந்தீர்?" எனலும், ஒரு கோடியே இருபது லட்சம் ப்ரான் (7 500,000 ரூபா) என்றனன். எழுத இறகெடுத்த உத்தியோகஸ்தன் பிரமித்து, இவன் பகடிக்கூத்தனோ அல்லது பயித்தியக்காரனோ என்று ஐயுற்று நின்றான். ஏனெனில், ஒருகோடியே இருபது லட்சம் ப்ரான் பாங்கில் போடக் கூடியவன், நாட்டுப்புறத்துக் கிளையாபீஸ் ஒன்றில் கால்நடையாக வந்து

சாமானிய உத்தியோகஸ்த னொருவனிடத்தில் தன் கருத்தைத் தெரிவிப்பது அசம்பாவிதமன்றோ? பின்னர் உத்தியோகஸ்தன் அவனை உற்று நோக்கி, அவன் முகத்தில் மாறுபட்ட குறிகள் ஒன்றும் தோன்றாமல் மிக்க அமைதியுடையவனாகக் காணப்பட்டது கண்டு, இன்னொருதரம் செவ்வையாகக் கேட்பவன்போல், "எவ்வளவு தொகை செலுத்தப் போகிறீர்?" என்று கேட்க, அவன் முன்போலவே ஒருகோடியே இருபது லட்சம் ப்ரான் என்றான். உத்தியோகஸ்தன் சற்று யோசித்து, "நல்லது, பாங்குத் தலைவரை அழைத்து வருகின்றேன்" என்று சொல்லிப் புறப்பட்டபோது, வந்த மனிதன் விஷயத்தில் சமுசயங் கொண்டவனாய்த் தன் மேசை முதலியவற்றை நன்றாகப் பூட்டிக்கொண்டு சென்றான்.

சிறிதுநேரத்துக்கெல்லாம் பாங்குத் தலைவன்வந்து அவன் முகத்தை வெகு கூர்மையாகப் பார்த்தனன். அவனுக்கும் ஒன்றும் புலப்படாமற் போகவே, "நீர் சகாயக் கடன் பணம் செலுத்த வந்தீரோ?" என்று அம் மனிதனைக் கேட்க, அவன், "ஆம் ஐயா" என்றனன். "எவ்வளவு தொகை?" என்றதற்கு, அமரிக்கையாக ஒருகோடியே இருபது லட்சம் ப்ரான் என்றனன். பாங்குத் தலைவன் நெடுநேரம் ஆலோசித்து, ஒரு கோடியே இருபது லட்சம் ப்ரான் உம்மிடம் இருக்கிறதோ?" என்று கேட்க, அவன் சிறிதும் கலக்கமின்றி, "ஆம் என்னிடத்தி லுண்டு" என்றனன். "இங்கு உம்மிடத்திலிருக்கிறதா?" என்று பாங்குத் தலைவன் கேட்க, "நான் பணம் போட்டிருக்கு மிடங்களிற்சென்று பெற்றுக் கொள்ள இதோ உண்டி வைத்திருக்கின்றேன்" என்று அம் மனிதன் கூறினன். அதை வாங்கிப் பார்த்ததும் பெரு வியப்புற்ற பாங்குத் தலைவன் தன் கீழுத்தியோகஸ்தனுக்குக் கட்டளையிட, அவன் பத்திர மெழுதிக் கொடுத்தான். பணக்காரன் இரசீது பெற்று எல்லாம் சரியாயிருக்கிறதா என்று பார்வையிட்டுக் கையொப்பம் வைத்து, வாசற்படி மட்டும் மரியாதையோடு பாங்குத் தலைவனால் வழிகொண்டுவிடப்பட்டுச் சென்றனன்.

இச் சம்பவத்தை பாங்குத் தலைவன் தலைமை யாபீசார்க்குத் தெரியப்படுத்தவே, அவர்கள் ஆச்சரியப்பட்டு விசாரித்ததில், அவ்வளவு அடக்கமுடைய தனவந்தன் மூன்று கோடியே சில்லறைத் தொகை பெறும்படியான நல்ல நிலங்களையுடைய ஒரு யிராசுதாரனென்றும், அவன் தனக்குள்ள பூஸ்திதியைப்பற்றி ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாம லிருந்தானென்றும் தெரியவந்தது. இவனை யறிந்தவர்கள் சாதா

சணப் பணக்காரன் என்று மாத்திரம் அறிவார்களே யன்றி, இவனிடத்தில் இவ்வளவு திரவியம் இருந்ததென்று ஒருவருக்கும் தெரியாது. வீண் ஆடம்ப்ரம் ஒன்றுமின்றி வசதியான ஒரு வீட்டில் வசித்து வந்தான். அவன் யாத்திரை செய்வதில்லை. வருஷத்திற்குக் குறைந்தது பன்னிரண்டு லட்சம் ப்ராங் வருமானமுள்ள இம் மனிதன் மற்றவர்களிடத்துத் தன் பிரபுத் தன்மையைக் காட்டாது தானிருக்கும் நாட்டுப்புறத்திலேயே அடக்கமாகச் சீவித்துவந்திருக்கிறான்.

தன் பெயர் முதலானவற்றை வெளிப்படுத்தவேண்டா என்று இவன் கேட்டுக்கொண்டபடியினலே அவற்றைக் குறிப்பிடக்கூடாமலிருக்கின்றோம். இவ்விதம் பிகாரோ என்னும் பிராஞ்சுப் பத்திரிகை கூறுகின்றது.

---

## பதிவிரதைகள் பண்டிகை.

பெல்ஜியத்தின் தலைநகரமாகிய புருய்க்ஸேல் பட்டணத்தில் வருடத்திற் கொருமுறை மடவார் பண்டிகை நடைபெறுகின்றது. அச் சுபதினம் ஜனவரி மாதம் 19-ந் தேதியாகும். அன்று ஆலயங்களின் மணிகளெல்லாம் உத்தமிகளின் மகிமைக்காகக் கணகணவென்று ஒலி செய்யும். இத் திருவிழாவின் காரணம் மிகவும் உருக்கத்துக் குரியது.

முற்காலத்தில் மேற்படி புருய்க்ஸேல் பட்டணத்தை முற்றுகைபோட்ட ஓரரசன் அங்குள்ள பெண்களுக்கெல்லாம், தங்களுக்குச் சொந்தமான விலையுயர்ந்த பண்டங்களை யெடுத்துக்கொண்டு பட்டணத்தைவிட்டு நீங்குமாறு உத்தரவளித்தான். அப்பெண்கள் ஒன்றுகூடி, தாங்கள் காப்பாற்றவேண்டிய அரும்பொருள்களைப்பற்றி யாலோசித்து, தங்கள் கணவர்களையே தோள்மேற் சுமந்து பதியைவிட்டுப் போகிறதெனத் தீர்மானித்தார்கள்.

இந்த அரிய செயலுக்கு உவந்த அரசன், பட்டணத்து முற்றுகையைத் தவிர்த்து அப் பட்டண வாசிகளுக்குச் சுவேச்சையைக் கொடுத்தான். இவ் விஷயத்தைப் பெல்ஜியத்துப் புலவர்கள் நாத்தழும்பேறப் பலமுறை புகழ்ந்து பாடியிருக்கின்றனர்.

நம் தேயத்தில் சாவித்திரி, நளாயினி முதலிய பதிவிரதா சிரோமணிகளைப்பற்றி நாம் கேட்டிருக்கிறோமல்லவா. பதிவிரதைகளை யெவர்தான் புகழார்!

---

## ஓர் பிராஞ்சு மாதின் காருண்யம்.

பிராஞ்சு தேசத்தின் தலைமை நகரமாகிய பரீஸில் பிரதான ரயிலடிகளில் தற்காலம் நடக்கும் சண்டையில் காயம்பட்ட யுத்த வீரர்களைச் சிகிச்சை செய்யக் கொண்டுவரும் புகைவண்டித் தொடர்களை அடிக்கடி காணலாம்.

அப்பொழுது ஒரு வாலிபப் பெண் தனது கரங்களில் இரண்டு கூடைகளை ஏந்திக்கொண்டு புகைவண்டித் தொடர் முழுதும் போகிருள். ஒரு கூடையில் அழகாயும் சுத்தமாயும் வெளுத்த கைத்துண்டுகள் வெகு விமரிசையாய் மடித்துவைக்கப்பட்டிருக்கின்றன. மற்றொன்று வெறுங் கூடையே.

கைத்துண்டு யாருக்குவேண்டும்? சுத்தமாயுள்ள கைத்துண்டு யாருக்குவேண்டும்? என்கிருளந்தப் பெண்.

உடனே போர்வீரர்கள் தங்களிடமிருக்கும் அழுக்கான துண்டுகளை வெறுங் கூடையி லெறிந்துவிட்டு, புதியதொன்றை எடுத்துக் கொள்ளுகிருர்கள். சற்றுநேரத்திற்கெல்லாம் வெறுங்கூடை சண்டைக்குப் போனவர்களின் துண்டுகளால் நிரம்புகிறதையும் மற்றொன்று வெறுமையாகிறதையும் பார்க்க, போர்வீரர்களுக்கும், மற்றும் அவ்விடத்தில் இவ் வதிசயச் செய்கையைக் காண்போருக்கும் குதூகலத்தைத் தருகின்றது.

இம் மாது வீட்டிற்குத் திரும்பினதும், பழைய துண்டுகளைச் சலவைசெய்து கூடையில் செவ்வனே மடித்து நிரப்பி மற்றொரு புகைவண்டித்தொடர் வருமுன் தயாராயிருக்கிருள்.

என்ன காருண்யம் பாருங்கள்! இவ்வித பரோபகாரம் செய்கிறதற்கு எவ்வளவு பொருள்வேண்டும்? சொற்ப முதலும், யூகையும் நன்மனதுமே போதும்.

இரண்டு கூடைகள் எல்லோருடைய வீட்டிலும் கிடைக்கக்கூடியவையே; சுமார் 50 கைத்துண்டுகள் செய்கிறதற்கு வேண்டிய துணியின் கிரயம் வெகு சொற்பந்தான். ஆனல், இத்தகைய செய்கை முதன் முதல் ஓர் பிராஞ்சு மாதின் மனதில்தான் உதித்தது.

அரியபெரிய தரும கைங்கரியங்களைச் சிறிய முதலைக்கொண்டு செய்யலாமென்பது இதன் மூலமாய் நன்கு விளங்குகிறது.

---

## வைத்திய வகைக் குறிப்பு.

அழுகண்ணிச் சித்தர்:— அழுகண்ணி யென்பது ஓர் சிறிய செடி, மரமன்று. இரண்டு வகைக ளிதிலுண்டு. ஒன்று சாணுயர முள்ளது. மற்றையது ஒருமுழ உயரமுள்ளது. பனி நாட்களில் புளிப்பு நீர் எடுக்கப்படும் கடலைச் செடிகளின் இலைகள்போ லிதனிலைகள் சிறியனவாயும் வழுவழுப்பாய் மிருக்கும். இலையின் முன்புறம் பூமியை நோக்கும், பின்புறம் ஆகாயத்தை நோக்கும். இலைகளில் எப்பொழுதும் நீர் கசிந்துகொண்டிருக்கும். இக் காரணங் கருதியே யிதன் பெயர் அழுகண்ணியாயது. இதற்கு வடமொழிப் பெயர் ருதந்தியாம். பொருள் வெளிப்படை. இச் செடி எப்பொழுதும் கறுப்பான உவர் நிலத்தில் முளைக்கும். இலை ருசியுள்ளதாயினும் கொஞ்சம் உப்புக்கரிக்கும். செடியின்கீழ் எறும்புகள் மொய்த்தவண்ணமாயிருக்கும்.

காயவித்தி வகையில் இது முக்கிய மூலிகையாகின்றது. இரத்தத்தைப் பெருக்கிச் சுத்தமாக்கிச் சரீரத்தை இறுகச்செய்யும். தாது புஷ்டி யுண்டாக்கும். நோய்களைப் புறத்தே ஓட்டும். இதைத் தினந் தினமு முட்கொண்டு காயசித்தி யடைந்த சித்தர்தான் அழுகண்ணிச் சித்தர். ஆதிநாளில் கடக ராசியில் சந்திர னுச்சியிலிருக்கையில் இம் மூலிகையைப் பிடுங்கிவந்து ஐந்துநாள் பனியில் வைத்து நிழலிலுலர்த்தி வஸ்திரகாயஞ் செய்து எடைக் கெடை தேனுங் கற்கண்டுஞ் சேர்த்து ஒரு வராகனெடை உட்கொள்ளத்தக்கது.

வடமொழிச் சுலோகம்.

ருதந்திநாம விக்யாதா ஜராவ்யாதி விநாசினீ
சணபத்ரோபமை: பத்ரைர்யுக்தாம்போபிந்து வர்ஷிணீ.

இதனால் முதுமைப் பருவத்தையும் நோயையும் நீக்குந் தன்மை யிம் மூலிகைக் குணமாகின்றது காண்க.

தி. வேங்கடராம ஐயங்கார்,
தமிழ்ப் பண்டிதர், புதுவை.

குறிப்பு:—இருஷிகள் ஆச்சிரமங்கள்போல் பூஞ்செடிகள் நிறைந்த தோட்டங்களுண்டாக்கிப் பாதுகாக்கும் பூர்வ புண்ணியம் வாய்ந்த தனவான்கள், தங்கள் தோட்டங்களில் இவ்வகைச் சித்த மூலிகைகளை யுண்டாக்கிக் காப்பாற்றிவந்தால் நோயணுகா வழிக்குச் சஞ்சீவிபோலுதவும். பலர்க்கும் பயன்படுவதா லறமும் திடப்படும்.

தி. வே.

# சற்புத்திரன் சஞ்சலம்.

## ஓர் சோகக் கதை.

(வெண்டாமரை ௪, 11-ம் பக்கத் தொடர்ச்சி.)

### அத்தியாயம் 5.

பார்க்கப் பசுங்கிளிபோ லிருக்குங் குழந்தை, நல்ல விற்பனமுடைய குழந்தை, தன் கண்ணுக்குக் கண்ணாகக் கருதி அன்பு செலுத்திவந்த தன் சொந்தக் குழந்தை கடுங்ங் என்ற கொடிய சப்தம் காதைத் துளைக்க, திடீரெனக் கிணற்றில் விழுந்தால் தமிழ் நாட்டுத் தாய் ஒருத்தி தன் நெஞ்சத்தில் என்ன உணர்ச்சியுறுவாள்! அதே கோரந்தான் என் நெஞ்சத்தில் துண்ணெனக் குதித்தது. 'ஆ!' என்ற ஒரே தொனியோடு என் இதழ்கள் ஒன்றை யொன்று விலகியிருந்தவாறே நின்று ஜன்னியால் அவஸ்தைப் படுகிறவர்களைப்போல் மருண்டு விழித்துக்கொண்டேயிருந்தேன். சாவித்திரியின் தாய் தேம்பிக்கொண்டே யிருந்தாள். ஆயினும், க்ஷணத்திற்கு க்ஷணம் மாற்றம் என்ற மாற்றமற்ற தெய்விகக் கட்டிலல்லவா உலகம் இயங்கிவருகின்றது. ஆகையால் சற்றுநேரத்தில் அவள் தேம்பலும் சிறிது நின்றது. எனது போலி ஜன்னி விழிப்பும் போயிற்று. இருவரும் மீண்டும் பேசலாயினோம். இடைக்கிடையே நான் விடுத்த வினாக்களையெல்லாம் விடுத்து அந்த அம்மாள் கூறியவற்றை மாத்திரம் கூறுகிறேன்:—

"என் தம்பி யொருவன் இந்த ஊரிலேயே நெடுந்தெருவில் வசிக்கிறான். அவனை நீங்கள் இதுவரையில் பார்த்ததில்லை. அவன் எப்பொழுதாவது ஆடிக் கொருமுறை அமாவாசைக் கொருமுறைதான் இங்கே வருவான். எங்களுக்கும் அவனுக்கும் மனஸ்தாபம் ஒன்றுமில்லை. அவன் வழக்கமே அதுதான். அவனுக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணு முண்டு. சாவித்திரி மூன்று வயதுக் குழந்தையா யிருந்தபொழுது அவன் திருப்பதி யாத்திரையாகத் தன் குடும்பத்தோடு புறப்பட்டான். கூட வரும்படி எங்களையும் அழைத்தான். விதியின் பயனால் எங்களுக்கு அச் சமயம் பிரயாணம் சற்று அசௌகரியமாகத் தோற்றிற்று. இயலாதென் றுரைத்தோம். "ஆனால் நான் குழந்தையையாவது அழைத்துக்கொண்டு போகிறேன். அதற்குச் சகல க்ஷேமங்களும் பெருகும். நீங்கள் தடைசொல்லவேண்டா" என்று வெகு அன்பாக வற்புறுத்திக் கேட்டுக்கொண்டான். தன் மனதில் அவன் பதித்திருந்த

வஞ்சகச் சூழ்ச்சியை நாங்கள் அறிந்தோமா என்ன! ஆகையால் சரி என்று சம்மதித்தோம். குழந்தையையும் கொண்டுபோய்விட்டான்.

திருப்பதியிலிருந்து என் தம்பி நாளைக்குத் திரும்பி வருகிறானென்றால் இன்றைக்கு எங்களுக்கு ஒரு கடிதம் கிடைத்தது. அந்தக் கடிதத்தில் அவன், பலர் வற்புறுத்தியதால் தன் மகனுக்கும் நமது குழந்தை சாவித்திரிக்கும் ஸ்ரீ வேங்கடேசப்பெருமான் சந்நிதி முன்பாக நல்ல சுபமுகூர்த்தத்தில் கலியாணஞ் செய்வித்துவிட்டதாகத் தெரிவித்து, "என்னவோ நடக்கவேண்டியது நடந்துவிட்டது. இனி யாரை நொந்து என்ன பயன்! அல்லாமலும் நிறைவேறிய காரியம் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல்தானாயிற்று. நெருங்கிய உற்றார்களுக்குள்ளேயே பின்னலிடப்பட்டதுபோல் விவாக சம்பந்தங்கள் நிகழ்ந்துகொண்டிருக்கும் பாக்யம் எல்லோருக்கும் கிடைக்காது. இந்தச் சுபகாரியம் தெய்வ சங்கற்பத்தினால் திடீரென நடந்ததே தவிர, எவ்வித மனித எத்தனத்தினாலும் நிகழ்ந்ததல்ல. இதற்கு நான்தான் உத்தரவாதியென்றும் நான் செய்யத் தகாதகாரியமொன்றைச் செய்துவிட்டேனென்றும் உங்களுக்குத் தோற்றினாலும், அதற்காக என்னை மன்னிக்கும்படி எவ்வளவு பணிவாகக் கேட்கவேண்டுமோ அவ்வளவு பணிவாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றபடி என்னென்னவோ சமாதானங்கள் சொல்லி நாலு முழ நீளம் எழுதியிருந்தான். அதைப் பார்த்ததும் எனக்கும் சாவித்திரியின் தகப்பனாருக்கும் மனம் எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே யோசித்துப் பாருங்கள். அவரோ, ஒருநாளும் என்னைப் பார்த்து 'சீ' என்று ஒரு வார்த்தை சொல்லாதவர். அன்றைக்கு அவருக்குப் பொங்கின ஆத்திரத்தினால், உன்னாலேதானடி இவ்வளவு விபரீதங்களும் வந்தன என்றவாறு என்னைக் கடிந்து திட்டினார். இரண்டு நாளாக இருவருக்கும் சரியான ஊணுறக்கங் கிடையாது.

திருப்பதி யாத்திரைபோன திருட்டுப் பாதகர்கள் திரும்பிவரு நேரத்தில் அவரே ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போனார். அவர்கள் வந்திறங்கியவுடன் அங்கேயே மீண்டுந் தன் ஆத்திரத்தையெல்லாங்கொட்டி ஒரு பேரமளி செய்துவிட்டுக் குழந்தையை மாத்திரம் வீட்டுக் கழைத்துக்கொண்டு வந்துவிட்டார். குழந்தையைப் பார்த்தேன் நான். பாம்பு சுற்றிக்கொண்டிருப்பதுபோல் அவள் கழுத்தில் மாங்கல்யம் கோத்த மஞ்சள் கயிறு கிடப்பதைக் கண்டேன். கோவென்றழுதேன். குழந்தையுங் கூடக் கதறினாள். இரண்டு வருஷங்கள் கழித்துக் கொண்டாட வேண்டியிருந்த இழவை அன்றைக்கே கொண்டாடித் தீர்த்தோம். ஐயோ! அந்த அவலக்ஷணத்திற்கு அநுசரணையாக, பித்தம்பிடித்தவரைப்

போலிருந்த அவளுடைய தகப்பனர் "தாலிக் கயிருவது! தரித்திரக் கயிருவது! இதோ அதை அறுத்தெறிந்துவிடுகிறேன் பார்" என்று சொல்லிக் கத்தி யொன்றைக் கையிலெடுத்து வந்தார். "வேண்டா, வேண்டா. என்ன இருந்தாலும் தேவ சந்நிதானத்தில் கட்டிய மாங்கல்ய மல்லவா!" என்று கூவிக்கொண்டே குழந்தையை மார்போடணைத்துக்கொண்டேன். அவர் என் இரண்டு கன்னங்களிலும் இரண்டு மூன்று அறை அறைந்து "ஆ! நீயும் இதற்கு உடந்தையாயிருந்து இப்போது மாய அழுகை அழுகிருய்" என்று தன் எண்ணத்தை நிறைவேற்றுவதற்காகக் குழந்தையை என்னிடமிருந்து பற்றி யிழுத்தார். நான் என்ன செய்வேன்! கத்தியால் அறுத்தெறிவதை விட, கழற்றி யெறிவதே நல்லது என்றெண்ணி அந்தப் பாழுந் தாலிக் கயிற்றைத் தலை வழியாகக் குழந்தையின் கழுத்திலிருந்து கழற்றித் தோட்டத்திற் கோடினேன். கூரைமேல் அதை எறிந்துவிட்டேன்.

பொழுது போகப்போக அவருக்குப் புத்தி தெளிந்தது. நடந்து போன விஷயங்களைப்பற்றிச் சாவதானமாகச் சிந்தித்ததனல், "நடந்தது நடந்தாயிற்று. இனி யாரை நொந்து என்ன பயன்!" என்று என் தம்பி எழுதின வேதாந்தமே அவர் மூளையிலும் தட்டிற்று. இனி என்ன செய்வது! தாலியை அறுத்து நெருப்பிலே போட்டுப் பொசுக்கிவிட்டாலும் கலியாணம் கலியாணமாகாமற் போகுமா! அல்லது இனி எப்பொழுதேனும் இந்தப் பெண்ணை மறு கலியாணஞ் செய்துகொள்ள யாரேனுந் துணிந்து வருவார்களா! அப்படி வந்தாலும் அப்படிச் செய்வது தான் ஒழுங்காகுமா! ஆகையால், இனித் தாலிகட்டிய பையனை உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவர முயற்சிப்பதுதான் நமது குழந்தையின் பாக்யத்தைத் தேடுவதாகும் என்று பேசித் தீர்மானித்து, தாலிக் கயிறெங்கே என்று விசாரித்தார். அது அவர் கடுங்கோபத்திற்கு அஞ்சி ஓடி யொளித்திருந்த இடத்தைச் சொன்னேன். உடனே ஒரு கோலினுல் அதைக் கோதி எடுத்து மீண்டுங் குழந்தையின் கழுத்திலிட்டோம். உண்மையில் அவள் தகப்பனர் நியாயாநியாயங்களைச் சீர் தூக்கிப்பார்த்து நடக்கிறவர். ஆனல் சற்று முன்கோபி. அந்த முன்கோபங்கூட என்னை நோக்கிப் பிரசன்னமாகும்படி அதற்கு முன்பு ஒரு சந்தர்ப்பமும் நேரிடவில்லை.

இவ்வளவுக்கும் காரணமாயிருந்த என் தம்பி, ரெயில்வே ஸ்டேஷனிலேயே தன் மைத்துனரிடமிருந்து எவ்வளவு ஆசீர்வாதங்களைப் பெற்றிருந்தபோதிலும், நாலைந்து தினங் கழித்துத் தன் மனைவியை யழைத்துக்கொண்டு வலிய இங்கே வந்தான். அப்பொழுது இவர் அவனுக்கு மீண்டும் திருப்பாட்டுகள் சூட்டாவிடினும் சரியாக அவனேடு முகங்

கொடுத்துப் பேசவில்லை. அன்று முதல் இன்று வரையில் அவர் அவனோடு கபடமற்றுக் கலகலவெனப் பேசியிருக்கமாட்டார்.

பின்பு தன் மருமகனுக்குச் செய்யவேண்டிய தீபாவளி உபசாரம், சங்கராந்தி உபசாரம் முதலிய கட்டுக்களையெல்லாம் செய்து தொலைத்தார். அவன் கல்வியில் நல்ல அபிவிருத்தி யடைவதற்கு என்னென்ன செய்யவேண்டுமோ அவற்றையெல்லாம் சிந்தித்துக்கொண்டிருந்தார். ஆனால் திருப்பதியிலிருந்து வந்த இரண்டாவது வருஷம் திடீரென எட்டே நாள் விஷ ஜ்வரத்தினால் அந்தக் கடன்காரன் கைவிட்டுப் போய் விட்டான்."

என்று கூறி முடித்து மீண்டும் ஏங்கித் தேம்பலாயினள் சாவித்திரியின் அம்மாள்.

*  *  *  *

இன்னும் ஒரே ஒரு விஷயத்தைப்பற்றி மாத்திரம் அந்த அம்மாளோடு பேச விரும்பினேன். அஃதாவது, விதவையாயிருந்தபோதிலும் சாவித்திரியின் நெற்றியில் எப்பொழுதும் அழகாகக் குங்குமப் பொட்டு இலங்கிக்கொண்டிருப்பதைப்பற்றியே.

(தொடரும்.)

சு. அ. சுப்பராயப்பிள்ளை.

---

## ஆன்மாக்களின் இணக்க வாழ்க்கை.

(டாக்டர் பால் கோரஸ் (Dr. Paul Carus) எழுதிய "மனிதன தான்மா" என்னும் நூலில் ஒரு பகுதி.)

எல்லா உயிர்களது இச்சா ஞான சக்திகள் பிற ஜீவர்களோடு இணங்கி நடக்கும் வாழ்க்கையைத் தமக்கு ஆதாரமாகக்கொண்டு நிற்கின்றன. பிறர்க்கு நம் கருத்தை வெளியிடாதிருக்கும் வரையில், எவ்வளவு காலந்தான் சென்றாலும், நம் அறிவு வளர்ச்சி அடையமுடியாது. நமது கருத்துக்களை ஒருவர்க்கொருவர் வெளியிடுவதும், அவைகளின் குண தோடங்களை ஆராய்ந்து தெரிவித்தலும் அறிவின் முதிர்ச்சிக்குக் கார

ணம். அன்றியும் ஒருள்ளத்தில் தோன்றும் அன்பு நெகிழ்ச்சியே பிறிதோர் இடத்தும் அதுபோன்ற நிகழ்ச்சியைத் தோற்றுவிக்க வல்லது.

நீ பிறர்க்குச் சொல்லும் ஒவ்வொரு வாக்கியத்தோடும் உன் ஆன்மாவின் ஒரு கூறு அவரைச் சென்று அடைகின்றது. அவர்களது உள்ளத்தில் உனது சொற்கள் வித்துக்கள் என்னப் போய் வீழ்தல் கூடும். அவைகளிற் சில, வழியில் வீழ்ந்து பறவைகளுக் கிரையாகி ஒழியலாம். வேறு சில வெறும்பாறைமேல் வீழ்ந்து பயனற்றுக் கிடக்கலாம். மற்றுஞ் சில முட்களின் இடைப்பட்டு அவைகளால் தம் வளர்ச்சி குன்றி நிற்கலாம். எனினும் அவைகளிற் சில நல்ல நிலத்தை யடைந்து வேரூன்றி வளர்ந்து சில நூறு மடங்கும், சில அறுபது மடங்கும், சில முப்பது மடங்குமாகப் பயனளிப்பனவாம்.

மக்கள் கூட்டத்தை ஒரு பவளச் செடிக்கு ஒப்பிடலாம். ஒவ்வொரு தனிப் பவளமும் தான் பிறக்கும் கிளையினூடேயுள்ள வாய்க்காலின் மூலமாய்ப் பிறவற்ரேடு தொடர்பு பூண்டுள்ளது. இவ்வாறு தன்னைச் சார்ந்துள்ள பவளங்கட்குத் தன்னிடத்து மிகுத்துத் தோன்றும் வலுவை ஈந்தாலல்லது தான் செழிப்புறுவதில்லை. மக்களது இணக்க வாழ்க்கையில் விசேடம் என்னவெனில், அது பவளச் செடிகளின் உள்ளொற்றுமையை விட மிக நெருங்கியது என்பதாம். தன் ஞான வைப்பை வரையாது வழங்கும் அறிஞன், பொருட் செல்வத்தை ஈபவன் போன்று, இருப்புக் குறையப்பெறுவதில்லை; பெருகக் காண்கிருன். ஏனென்ருல், ஞானமாகிய செல்வம் தான் எவ்வளவு தாராளமாக வழங்கப் படுகின்றதோ அதற்கேற்பத் தன் உயர்வு சிறக்கப்பெறும் இயல்பினதாய் உள்ளது. அது பலரிடத்தும் சேருங்காலத்து அதற்கு வலுவதிகரிக்கின்றது. பிறர்க்கு ஞானதானஞ் செய்யும் ஒவ்வொரு தடவையும் நாம் அவர்களது உள்ளங்களைக் கவர்ந்துகொள்ளும் வகையால் லாபமடைகின்ருேம். நம் கருத்துக்கள் பெருகி, நம் முயிரின் குறுகிய எல்லைகளைக் கடந்து, பிற உள்ளங்களிற் புகுந்து அங்கும் வளர்கின்றன. ...... ஞானதானமாவது நமது மனதைப் பிறர் மனத்திற் பொருத்தலாம். ஒருவர் மற்றவரோடு சம்பாஷிக்கும்போதெல்லாம் அவர் தம்மைப் பிறர்க்குத் தந்து பிறரைத் தமக்கெனக் கொள்கின்ருர். உண்ணல் உடுத்தல் உறங்கல் சுகித்தல்களை யன்றிப் பிறிதொன்றும் விரும்பாப் பேதைமாக்கள்பால் ஆழ்ந்த கருத்துக்கள் தோன்றுவதை எதிர்பார்த்தற்கு ஏதுவில்லை. ஆனல் குறைவிலா ஞானச் செல்வமுடையோர், லோபிகள் போன்று, தம் முடைமையைத் தம் பொருட்டே வைத்துக்கொண்டிரார்.

உள்ளத்தில் (அன்பும் அறிவும்) நிரம்பிய வழி (நல்ல) பேச்சுண்டாகின்றது. நாம் பிறர்க்குதவும் ஞானச் செல்வம் அழிந்துபோவதில்லை; வட்டிக்குக் கொடுத்த பணம்போல் வளர்ந்து, பெரிய பலனைத் தருகின்றது. உயர்ந்த கருத்துக்களும், உண்மைச் சொற்களும், அன்பினின்பாற் பிறந்த இன்னுரைகளும், நம் சொந்த லாபத்திற்கே யல்லாவிடினும் பொது வகையில் பெருங் காரியங்களைச் செய்துமுடிக்க வல்லவை. ஆனால் தீய மொழிகளுக்கும் இதுபோன்ற வன்மை உண்டு. நன்னெறியில் நிலைத்து நிற்கும் திட மனமுடையோர் தீமொழிகளைக் கேட்டால் அவைகளைத் திரஸ்கரிப்பர்; கோழை நெஞ்சுடையவர்களோ அவைகளால் கலக்கமெய்தித் துன்புறுவர். வார்த்தைக்கு இவ்வளவு வன்மை இருத்தலால், நாம் வாய் திறக்குமுன் வெளியிட எண்ணும் ஒவ்வொரு சொல்லின் பயனையும் அளவிட் டறியவேண்டும். "தாம் பாராட்டும் பயனில் சொல் ஒவ்வொன்றிற்கும், மனிதர் தீர்ப்புநாளில் ஒப்பு சொல்ல வேண்டியவராயுள்ளார்" என்றார் கிறிஸ்து. இத் தீர்ப்புநாள் இங்கேயே, இப்போதே நிகழ்கின்றது. ஒவ்வொரு சொல்லும் தனக் கியல்பாயுள்ள பயனை விளைக்குங் காலமே அத் தீர்ப்புநாள். ..........

"தேச சரித்திரமாவது தேசத்தவர்களது அறிவு குணஞ் செயல்களைப்பற்றிய தீர்மானம்". அதைப்போல் ஒவ்வொருவனது சரித்திரமும் அவனவனது இம்மை மறுமை வாழ்க்கையாம். அவற்குத் தீர்ப்புநாளாய் நிற்பது, இம்மையில் கர்ம பலன்களை அனுபவிக்கச்செய்து, மறுமையிலும் முற்பகல் செய்த ஒவ்வொரு நன்மைக்கும் இன்பமும் ஒவ்வொரு தீமைக்கும் துன்பமும் பொருந்துமாறு கூட்டு மியல்பினது.

தான் இறந்தபின் விளையும் தனது இம்மைச் செயல்களின் பயன்களைப்பற்றிச் சிறிதும் எண்ணாதிருக்கும் ஈனன் யாவன்? தன் செய்கைகளின் பின்விளைவுகள் மக்கட்குத் துன்பமாய் முடியுமோ அல்லது இன்பமே தருமோ என்று கவலாதிருக்கும் கசடன் யாவன்? நாமிறந்த பிறகு நமக்குப் பின்வருவோர் நம் செயல்களைப்பற்றி என்ன எண்ணுவார்கள் என்பதையும், நமக்கென லாப நட்டமொன்றும் எதிர்பாராது ஒய்ந்து கிடக்கும் நமது மறுமை நிலையில் நம் இம்மை வாழ்க்கையைப்பற்றி நாமே என்ன நினைப்போம் என்பதையும் கூர்ந்து யோசிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

நம் பின் சந்ததியாரது முன்னேற்ற வழி நின்று எதையும் ஆராய்வது நம் பொறுப்பு. செய்யக்கூடிய காரியங்களில் தக்க இன்ன தகா

தன இன்ன என்று பகுத்தறியப் புகுங்கால், இந் நிலைமையைச் சிறப்பு வகையால் கவனிக்கவேண்டும்.

(வரும்.)

S. சச்சிதாநந்தம்பிள்ளை, B. A., L. T.

---

## பெண்கள் விடுதலை.

நமது தேசத்துப் பெண்கள் கொடுமையை நம் பாரதமாதா, எவ்வளவு காலத்திற்குத்தான் பொறுத்துக்கொண்டிருப்பாள்? பெண்மக்களின் கொடுமையை நம் தாய் சற்றும் பொறுக்கக்கூடாதவளாய் நம்மைத் தூண்டுகிறாள், எதற்குத் தூண்டுகிறாள்? பெண்களின் அடிமையை ஒழிக்கும்படி தூண்டுகிறாள். நமக்குச் சுதந்தரமென்னும் அற்புத சக்தியைக் கொடுத்து நாட்டை இனிதுறச்செய்ய விரும்புகிறாள். ஒரு விஷயமும் நம்மால் இயலாதென்று சும்மா இருந்தாலும் அன்னை என்னுள்ளத்தில் பலபல யோசனைகளை விளைவிக்கிறாள். அவளுடைய சக்தியை வாழ்த்துகிறோம்.

ஆண்மக்கள் தம்மைப்போல் சமான அறிவுடன் பிறந்த பெண்மக்களின் அறிவை நசுக்கி மிதித்துவிட்டு அடிமை பாராட்டுகிறார்கள். ஸ்திரீகளைத் தாய்களென்று உணராமல் இகழ்ச்சியுடன் நடத்துகிறார்கள். புஜபல பராக்கிரமசாலியான சுத்த வீரனும் ஸ்திரீயின் வயிற்றிலே ஜனிக்கிறான். வானசாஸ்திரம், பூமிசாஸ்திரம் முதலிய சகல சாஸ்திரமும் கற்றுணர்ந்த பண்டிதனும் அந்த ஸ்திரீயின் வயிற்றில்தான் ஜனிக்கிறான். புருஷர்கள் உயர்வென்றும் ஸ்திரீகள் தாழ்வென்றும் கொண்ட கொள்கையுடையவனும் அந்த ஸ்திரீயின் வயிற்றில்தான் ஜனிக்கிறான். சுருக்கமாக — தேச சக்ரவர்த்தியா யிருப்பவனும் அந்த ஸ்திரீயின் வயிற்றில் தான் ஜனிக்கிறான். ஆதலின் உலகம் நிகழ்கின்ற தன்மைக்கே ஸ்திரீகள் காரணமாயிருக்கிறார்கள். ஒரு புருஷன் முதலில் தாயின் காவலுக்குட்பட்டிருக்கிறான். தந்தையின் ஆளுகையில் சற்று இருந்தபோதிலும், தாயின் நேரான ஆளுகைக் குட்பட்டிருப்பதற்குத்தான் மிகவும் அதிகமாகச் சந்தர்ப்பங்களிருக்கின்றன. அன்றியும் புருஷன் தன் தாய்க்குப் பின் தாரத்தின் அன்பிற்கும், ஆதரவிற்கும், பராமரிப்புக்கும் உட்படுகிறான். இவ்வித மிருக்க, சகல ஸ்வாதீனங்களும் புருஷர்களுக்குத் தான், ஸ்திரீகளுக்கோ, வேறெவ்வித ஸ்வாதீனமும் கிடைப்பது அருமை

யாயினும், அவரவர் மன ஸ்வாதீனங்கூட இல்லை என்று நடத்துகிறார்கள். இதைப்போலே ஒரு கொடுமையுண்டோ?

புருஷர் உயர்வென்பதையும், ஸ்திரீகள் தாழ்வென்பதையும் ஆராய்ச்சிசெய்து பார்ப்போம். அறிவிலே மேற்பட்டது உயர்ந்த ஜாதி, அறிவிலே குறைந்தது தாழ்ந்த ஜாதி. ஒரு தாய் வயிற்றிலே பிறந்து ஒரு வீட்டில் வளரும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரேவிதமான படிப்பிருந்தால் ஆண் மேலாகவும் பெண் தாழ்வாகவும் இருக்குமென்று நினைக்கிறீர்களா? தற்கால நிலையிலேகூடப் பெண்களிலே மிகுந்த அறிவுடையவர்கள் இல்லையா? படிப்பிலும், தேர்ச்சியிலும், மிஸஸ் அனிபெஸான்ட் என்ற ஸ்திரீ ஆண்மக்களுக்குக் குறைந்தவளா? தேக பலத்தை எடுத்துக் கொண்டால் அதிலேகூடத் தாராபாயைப்போன்ற ஸ்திரீகளைப் பார்த்துக் கொள்ளலாம். புருஷர்கள் எவ்விதப் பழக்கத்தில் விருத்தியடைகிறார்களோ அதே பழக்கத்தில் ஸ்திரீகளும் விருத்தியடைவார்களென்பதில் யாதொரு ஆக்ஷேபமுமில்லை. மைசூரில் ஆண் கல்விச்சாலையைப்போல், ஸ்திரீகளுக்கும் பிரத்தியேகமான கல்விச்சாலை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. புருஷர்களைப்போலவே ஸ்திரீகளும் உயர்ந்த பரீக்ஷைகளில் தேர்ச்சிபெற்றிருக்கிறார்கள். சென்னபட்டணம் பிரஸிடென்ஸி காலேஜில் ஆண்மக்களுடன் பெண்களும் வாசித்து, ஆண்மக்களைப்போல் தேர்ச்சிபெற்று வந்தார்கள். 1915-வது ஆண்டில் பட்டணத்திலும் ஸ்திரீகளுக்கு பி. ஏ. பரீக்ஷை வரையில் பிரத்தியேகமான கல்விச்சாலை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஐரோப்பாவில் ஸ்திரீகளின் கல்வி விருத்தியும் சமத்துவமும் சாதாரணமாயிருக்கின்றன. நமது நாட்டில் தற்காலம் குறைவாயிருந்தபோதிலும் சிறிதுகாலத்திற்குள் ஸ்திரீகளின் கல்வி விருத்தியும் சமத்துவமும் சாதாரணமாகிவிடுமென்று நம்புகிறேன். புருஷர்களை எப்படி உந்நத நிலையில் கொண்டுவரவேண்டுமென்று பாடுபட்டு அவ் வுந்நத நிலையை அவர்கள் அடையச்செய்கிறார்களோ அவ்விதமே ஸ்திரீகளுக்கும் பாடுபட்டால் அவர்களும் அவ் வுந்நத நிலையை அடைவார்களென்பது நிச்சயம். புருஷர் ஞானத்தில் உயர்ந்தவர்களென்றும், ஸ்திரீகள் தாழ்ந்தவர்களென்றும் சிலர் அறிவின்மையாலே சொல்லுகிறார்கள். இயற்கை யறிவு இரு பாலருக்கும் ஒன்றுபோலவேதான் ஏற்பட்டிருக்கிறது. இதில் சந்தேகமில்லை.

ஆசாரம் ஆசாரம் என்று வழங்கும் பழைய வழக்கத்தினால் தீமை உண்டாகிறதே யன்றி நன்மை உண்டாகவில்லை. பெண்கள் தம் இஷ்டப்படி கணவனை வரித்தால் அநேக துன்பங்கள் குறைவுபடுமாதலால்,

இது ஓர் முக்கியமான சீர்திருத்தமாகும். பெண்களை வீட்டுக்குள் ஓர் பொந்தில் வைத்திருக்கும் பழைய கெட்ட வழக்கத்தினால் தீமை உண்டாகிறதே யன்றி நன்மை உண்டாகிறதில்லை. மிருகங்களைப்போல் அடைத்துவைப்பதனால் ஸ்திரீகள் சிறந்த பதிவிரதைகளாய் விடுவார்களென்று மூடர்கள் நினைக்கிறார்கள். உள்ளத்திலே பரிசுத்தம் வேண்டும். அதில்லாவிட்டால், பெண்களைப் பொந்தில் வைப்பதால் யாதும் பயனில்லை. தனது கற்பைக் காத்துக்கொள்ளவேண்டுமென்னும் உறுதியிருந்தால் ஒரு ஸ்திரீ என்ன இடுக்கண் வந்தபோதிலும் தனது கற்பைக் காத்துக்கொள்ளுவாள். வீட்டுக்குள் அடைத்துவைத்திருக்கும் நிபந்தனையாலேயே ஸ்திரீகள் கல்வியில் விருத்தியடைவதற்குச் சாத்தியப்படாமல்போகிறது. அன்றியும், அன்னிய புருஷர்கள் எதிரில் சென்றாலும், அல்லது வார்த்தையாடினாலும் குற்றமாக நினைத்து நமது நாட்டுப் புருஷர் அவநம்பிக்கை கொள்ளுகிறார்கள். உள்ளப் பரிசுத்தம்பெற்ற உத்தம ஸ்திரீகள், அன்னிய புருஷர்களைக் குருவாகவும், தந்தையாகவும், சகோதரராகவும் கருதுவார்கள். தங்கள் கணவனுக்குத் துரோகம் நினைப்பார்களா? தம்முயிர் பிரிந்தபோதிலும் துரோகம் நினைக்கமாட்டார்கள். ஆதலால் ஸ்திரீகளுக்குக் கல்வியைப் புகட்டி விடுதலை உண்டாக்கினால் உத்தம ஸ்திரீகள் உலகில் பெருகுவார்கள். ஸ்திரீகள் நற்காரியமாக வெளியில் செல்லவேண்டுமென்றால், அவர்கள் விஷயத்தில் அவநம்பிக்கையும், சந்தேகமும் ஒழிந்து, நல்ல அபிமானமும், நம்பிக்கையும் கொள்ளவேண்டும்.

விடுதலை வேண்டுமென்றால் குடும்ப ஸம்ரக்ஷணைகளை விட்டுவிடவேண்டுமென்பதில்லை. குடும்பத்தைச் சிறப்புடன் விளங்கச் செய்வதற்கு உண்மையாகப் பாடுபடுவதை ஸ்திரீ எக்காலத்திலும் விடமாட்டாள்.

துன்பத்திற்கு முதன்மையாகி யாதொரு நன்மையும் பயக்காத பழைய ஆசாரத்தையும், அடிமைத்தனம் என்னும் பேயையும் அறிவென்னும் கூரியவாளால் சிதைத்து, கல்வியும் சமத்துவமும் உலகில் பெருகவேண்டுமென்று நம் பாரதமாதா கங்கணங் கட்டிக்கொண்டிருக்கின்றாள் எனில், அதைத் தடுக்க யாரால் முடியும்?

வே. மங்கையர்க்கரசி. (பே. மு.)

MAHAMAHOPADHYAYA DR. U.V. SWAMINATHA IYER LIBRARY



# நமது நங்கையர்கள்.

(ஓர் புதிய கிளர்ச்சி.)

(வெண்டாமரை ௩, இதழ் ௧௨, 274-ம் பக்கத் தொடர்ச்சி.)

## திருத்தம்.

தமிழ் நாட்டுப் பெண்களை நோக்கிச் சாரதை யன்னை சாற்றுகின்றாள்.

### ஆநந்தக் களிப்பு.

1. அஞ்சி மயங்கி யிராதே — உன்றன்
நெஞ்சினில் மூண்ட நெருப்பை நிறுத்தின்
பஞ்சை யெனும்பெயர் பட்டு — வெறுஞ்
சஞ்சலத் தீயினிற் சாகுவை பேதாய்.

2. அற்புத சக்தி யளிப்பேன் — என்றன்
பொற்பத நெஞ்சம் பொருந்தி யுருகின்
அற்பொளிர் அன்னை யறைந்தேன் — என்றன்
சொற்பதஞ் சத்தியஞ் சோர்ந்திடேல் சற்றும்.

3. தாயெனத் தண்ணருள் கொண்டு — என்றன்
சேயுனக் கிவ்வுரை செப்பினேன் செல்வி
நீயென தன்புரை நீக்கின் — தெரு
நாயினுக் கேயொரு நாயாய் நலிவாய்.

4. அன்னையான் என்னையே நம்பு — உன்றன்
நன்னய மென்ன நவிலுற லாகுந்
தன்னயப் பேய்களின் பேச்சை — உன்னிற்
பன்னிரு காதம் பறந்திட ஓட்டு.

5. புந்திக் கியைந்திடா விந்தை — பலர்
முந்தை யிருந்தோர் மொழிந்தன ரென்று
சிந்தை யிருக்கச்செய் யாமல் — இருட்
கந்தி லவையெலாஞ் சாகவே யுந்து.

6. கொடியதென் றுன்னுளங் கூவும் — செயல்
நெடியமுன் னோர்கள் நிகழ்த்தின ரென்று
சொடியதை நீகொண்டு பேணின் — அடி
மடமை யதைப்போல் மகிதல முண்டோ.

MAHAMAHOPADHYAYA DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
MAHAMAHOPADHYAYA DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
MAHAMAHOPADHYAYA DR. U.V. SWAMINATHA IYER LIBRARY

7. இனியிவ் விகழ்ச்சி தொலைப்பேன் — எனும்
முனிவு முதிர்ந்துயான் முன்வந்து விட்டேன்
இனியவிவ் வுண்மையை யேற்றுன் — உளங்
கனிவு பொலியக் களித்திடு கண்ணே.

8. காரிகை என்னைக் கருதி — நனி
சீரியல் தூக்கியுன் சிந்தையுள் நோக்கின்
நேரிய நோல வென்ப — பெரும்
பேரிகை யார்த்தெனப் பேசுமுன் னெஞ்சே.

9. நேரிய நல்லன வெல்லாம் — அடி
காரி யுமிழ்ந்தெண்ணில் காதந் தூரத்து
நேரிய தாயின வெல்லாம் — உன்றன்
வீரிய மென்ன விழைந்தகம் பற்று.

10. கோடிக ளொன்றுறக் கூடி — உனைச்
சாடின ராயினுஞ் சற்றுஞ்சோர் வின்றிச்
சூடிய கொள்கை சுவர்க்கம் — எனப்
பாடிட்டீ நெஞ்சம் பொங்கிடும் பாட்டை.

11. பஞ்சை யெனும்பெயர் பட்டு — வெறுஞ்
சஞ்சலத் தீயினில் சாவுற வேண்டா
அஞ்சி மயங்கி யிராதே — உன்றன்
நெஞ்சினில் மூண்ட நெருப்பை நிறுத்தேல்.

அஞ்சி மயங்கி யிராதே.

சுபம். கலைமகள் கருணை பெருகுக. தமிழ் நாட்டிற்குச் சகல மங்களங்களும் பொங்குக.

மங்களம்.

---

# இலக்கியப் பகுதி.

## யசோதர காவியம்.

### நூன்முகம்.

இந்நூல் சிறுபஞ்ச காவியங்களுள் ஒன்று. மற்றையவை சூளாமணி, உதயண காவியம், நாக குமார காவியம், நீலகேசி யென்பன. இவற்றுள் சூளாமணி யாழ்ப்பாணம் ஸ்ரீமான் சி. வை. தாமோதரம்

பிள்ளை யவர்களாலும், யசோதரகாவியம் தில்லையம்பூர் ஸ்ரீமான் வேங்கடராம ஐயங்கார் அவர்களாலும் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டன. ஏனைய மூன்றும் இன்னும் அச்சுக்கு வராமல் ஜைனர் கையில் பதுங்கிக் கிடக்கின்றனவென்று தெரிகின்றது.

யசோதரகாவியம் இற்றைக்குச் சுமார் ௨௨௦௦ ஆண்டுகளுக்கு முன்னர் மகத தேசத்தி லரசுபுரிந்த அசோகனுக்குப் பிற்பட்டகாலத்தில் ஏற்பட்டதென்ப, இக் கதைத் தலைவனான யசோதரன் அசோகனுக்குச் சந்திரமதி யென்பாளிடம் பிறந்த மகனாதலின்.

இந்நூலை வடமொழியிற் பாடியவர் ஸ்ரீ வாதிராஜமுனிவர் என்ப. தமிழிற் பாடியவர் ஜைன முனிவரென்று மட்டும் தெரிகிறது. வேறு வரலாறு விளங்கவில்லை.

இதிற் பெரிதும் காணக்கிடக்கும் பொருள்கள்: மறு பிறப்பு உண்டென்பதும், நல்வினை புரியுமாக்கள் தேவகதி முதலியவற்றை யடைந்து நன்மையடைவார்களென்பதும், தீவினை செய்பவர்கள் விலங்கு கதி, நரககதி முதலியவற்றை யடைந்து தீமையுறுவார்களென்பதும் பிறவுமாம்.

தேனொழுக்கென்னத் தெள்ளிய செந்தமிழ் நடையில் படிப்பதற்கு மிக இனிமையாக அமைந்துள்ளது இந்நூல். ௨௨௦௦ ஆண்டுகட்கு முன்னர் வழங்கிய இத் தமிழ் நடையை இப்போதைய தமிழ் மக்கள் தெரிந்து களிக்கற் பொருட்டே, சென்ற ஆண்டுக் கலைமகளில் சீவக சிந்தாமணியைப்போல, இவ்வாண்டுக் கலைமகளில் இலக்கியப் பகுதியில் இந்நூல் எழுதப்படுகின்றது.

“சிலகாலம் மணிமேகலையும், சிலகாலம் சீவகசிந்தாமணியும் எழுதப்பட்டு வந்தன. எதுவும் இதுவரையும் முடிக்கப்படவில்லை, கதை முடிவு முழுதும் தெரியவில்லை, அங்ஙனமிருக்க வேறு நூல் தொடங்குவது எதற்கு?” என்று சிலர் நினைக்கலாம். அங்ஙனமாயின், ஒரு நூல் முடிவதற்கே எவ்வளவோ காலம் கழிக்கவேண்டிவரும். ஆகவே மற்றைய நூல்களின் இனிமை வெளிப்படுவதெங்ஙனம்? அன்றியும் யாம் கதை சொல்லுதற்கு வந்தோமில்லை. இயன்றவரையில் பழைய இலக்கியங்களின் இனிமையையும், தமிழ் மொழியின் எழிலையும் காட்டவேண்டுமென்பதே யெமது கருத்தென்க. கதையை விரும்பினால் அந்நூல்களை வாங்கிப் படித்துத் தெரிந்துகொள்ளலாம். அங்ஙனம் நேருமேல், அதுவும் ஒருவிதத்தில் தமிழ் வளர்ச்சிக்கு இடமாகுமென்பது எமது உள்ளக்கிடை.

## நூல்.

### முதலாவது சருக்கம்.

நாவலந்தீவு என்னும் இப் பரதகண்டத்தில் நீர்வள முதலிய நிரம்பப் பெற்று, நறுமணங் கமழ்கின்ற பூம்பொழில்கள்மேல் முகிற்குலம் தவழாநிற்க ஒப்பற்று விளங்கும் ஔதயம் என்னும் நாடொன்றுண்டு. அந் நாட்டிற்குத் தலைநகராயுள்ளது இராஜபுரம் என்ப. அது செல்வத்தாலும் திசைதொறும் பரவிய புகழாலும் பல்வகை நுகர்ச்சியாலும் மற்றைய பொருள்களாலும் அளகாபுரி ஒன்றல்லது ஏனையவையிணையில்லாதிருக்கப்பெற்றது.

1. இஞ்சி மஞ்சினை யெய்தி நிமிர்ந்தது
மஞ்சு லாமதி சூடின மாளிகை
யஞ்சொ லாரவர் பாடலொ டாடலால்
விஞ்சை யருல கத்தினை வெல்லுமே.

இத்தகைய நகரத்தில் மாரிதத்தன் என்னும் மன்னன் அரசு செலுத்திக்கொண் டிருந்தான். மாலை, வெண்பொற்குடை முதலிய சிறப்புப் பொருள்களுடன் அவனும் அவனது குடிகளும் பண்டைக் காலத்தினும் மும்மடங் கதிகமாக மகளிர் முயக்கு முதலிய நுகர்ச்சியில் இன்புற்றுத் தம்மை மறந்தனர். செல்வ மயக்கினால் விண்ணின்பமும் வீடும் அடையுந் திறனை யுணராதவராயினர். இங்ஙனம் அரசன் வாழு நாளில் இளவேனிற் பருவம் வந்தது.

2. கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன
வாங்கு வாகை வளைத்தன சாமரை
கூங்கு யிற்குல மின்னியங் கொண்டொலி
பாங்கு வண்டொடு பாடின தேனினம்.

மலர்ந்த பூங்கொடிகள் மங்கையர்கள்போன்று இடங்கள்தோறும் ஆடித் தாழ்ந்தன. கலந்த காதலைக் காட்டுநர்போல, மாமர முதலியன தளிர்க்கப்பெற்றன. இங்ஙனம் மா முதலிய மரங்களாகிய ஆடவர்கள் தளிர்களால் அணிந்துகொண்டு எதிர்கொண்டழைப்ப, வேனிற் பருவமாகிய வேந்தன் வந்தனன். வந்ததும், மாரிதத்தனும், அந்நகர மாந்தரும்

---

1. இஞ்சி – மதில். மஞ்சு – மேகம். அஞ்சொலார் – மகளிர். விஞ்சைய ருலகம் – வித்தியாதர ருலகம்.

2. வாகை – ஓர்வகைப் பூமரம். சாய்மரை – சாமரை. இயம்–வாச்சியம். தேன் – பெண் வண்டு.

நகர்ப்புறத்தேயுள்ள சோலையின்கண் சென்று வேனில் விழாக் கொண்டாடுவாராயினர். எல்லோரும் பூந்தோட்டங்களிலும், குளங்களிலும், சோலைகளிலும் கூடிக் குலாவி வேனில் விளையாட் டயர்ந்தபொழுது, அந்நகர மாந்தரிற் பலரும் ஒருங்கு திரண்டுவந்து மாரிதத்தனை வணங்கி, இது வழுத்துகின்றனர்:

"மன்னனே! எப்போதும் இவ்வேனிற் பருவத்தில் இந்நகர்த் தெய்வமாகிய சண்டமாரிக்குத் திருவிழாச் செய்வது வழக்கம். அதனையிப்போது மறந்துவிட்டோம். அச் சண்டமாரி உளம் வேறுபட்டுச் சினங்கொள்வாளானால், பல தீமைகள் நம்மை வந்து பொருந்தும்;

"நோவு செய்திடும் நோய்பல வாக்கிடும்
ஆவி கொள்ளும் அலாதனவுஞ் செயும்;"

ஆதலின், அத்தெய்வத்தின் பூசைக்கு நாமனைவரும் புறப்படல்வேண்டும்" என்றனர்.

அது கேட்ட அரசன், நல்லறங்களிற் றெளிவில்லானாதலின், துட்ட தெய்வத்தின் வழிபாடு கொலைக்கிடனாகித் தீங்கு விளைக்குமென்பதை யறியானாய், நன்றென்று உடன்பட்டு, நகரத் தென்புறத்திலுள்ள சண்டமாரி கோயிலுக்குச் சிறப்பொடு சென்றனன். சென்றவன், ஞானக் கேள்வியும் கூரிய அறிவுமில்லாத சில தொண்டர்கள் தொழும் தூர்த் தேவதையும், பாவ மூர்த்தியுமாகிய அத்தேவியை யடைந்து, "தேவியே! எனது துன்பத்தைப் போக்கியருளுக" என்று வணங்கி நின்றனன். உடனே பூசை தொடங்கப்பட்டது. அப்போது தேவி பலிக்கென்று,

3. மன்ன னாணையின் மாமயில் வாரணம்
துன்னு சூகர மாடெரு மைத்தொகை
யின்ன சாதி விலங்கி லிரட்டைகள்
பின்னி வந்து பிறங்கின கண்டனன்.

அரசன் அங்குள்ளவர்களை நோக்கி, "குடிகளே! பின்னர் யான் எனது வாளினால் அழகிய மக்களிரட்டையைப் பலிகொடுத்துப் பூசை செய்வேன்; நீங்கள் முன்னர் இவ் விலங்குப் பூசையை முடியுங்கள்" என்று கட்டளையிட்டு, சண்டகருமன் என்னும் தனது படைத்தலைவனை நோக்கி, "இணையற்ற எழில் நிரம்பிய இரண்டு மக்களைக் கொணருதி" என்று கூற, அவனும் அத்தகை மக்களிரட்டையைத் தேடிக்கொண்டு நகர்க்குள்ளே சென்றனன்.

---

3. வாரணம் – கோழி. சூகரம் – பன்றி.

அப்போழ்து, **மாயமில் குணக்குன்றன்ன மாதவர்க் கிறைவன்,** **சுதத்தாசாரியன்** என்னும் பெயரினன், ஐந்நூறு முனிவர்களும், தவத்தின் மிகுத்த உபாசகர்கள் பலரும் தன்னைச் சூழ்ந்துவர, வெகுதூரத்தினின்றும் தீர்த்தங்களைக் கண்டு வணங்கிச் செல்பவன், அங்கு வந்து அந்நகர்ப்புறத்துள்ள ஓர் சோலையின்கண் தங்கி, வழிச்செலவில் நேர்ந்த தீமைகள் நீங்குமாறு சாந்தி முதலிய நியமங்களை முடித்து, மேற்பரிவாரம் சூழ ஓர் ஆசனத்தி லெழுந்தருளி யிருந்தனன். அன்று யாவரும் அங்கு உணவொழித்திருக்கும் நோன்பைக் கைக்கொண்டிருந்தனர். அப்பொழுது அக் குழுவில், **இளம்பிறை யனைய நீரார் அபயருசி** யென்பானும், அவன் தங்கை **அபயமதி** யென்பாளும் அவ்வாசிரியர்க் கெதிரில் வந்து வணங்கி நின்றனர். அம் முனிவர் அவர்கட்கு ஆசிகூறி, "**வம்மி னீர் பசியின் வாடி வருந்திய மெய்யரானீர்,** உபவாசமிருத்தல் உங்களால் முடியாதாதலின், இன்று நகர்க்குட் சென்று உணவேற்றுண்டு வருக" என்று கட்டளையிடலும், அவர்கள் அம் மாதவர் குழாத்தை வணங்கி வெளிப்போந்து, மாலையும், சந்தனப்பூச்சும், மணிக்கலன்களு மின்றி, வெள்ளிய ஆடையொன் றணிந்து அழகிய வாலவடிவினராகி, பிச்சை யேற்றற் பொருட்டு, **வள்ளலு மடந்தை தானும் வளநகர் மருமம் புக்கார்.** புகுந்தவர்கள், தம் கண்முறைக் கெதிரில் ஒரு வில்லினளவு உயிர்களொன்று மில்லாதபடி நிலத்தைப் பார்த்துக்கொண்டு, தரையில் கால்களை மெல்லென வைத்துக்கொண்டு, யாரேனும் இல்லறத்தார் எதிர்கொண்டீயும் உணவை யேற்றுக்கொண்டு, **நல்லறம் வழுவ லுண்டார் நடந்தனர் வீதியூடே.**

4. அண்டல ரெனினுங் கண்டா லன்புவைத் தஞ்சு நீரார்
கண்டனன் கண்டு சண்ட கருமனு மனங்க லங்காப்
புண்டரீ கத்தின் கொம்பு பொருவில்மன் மதனும் போன்று
கொண்டிளம் பருவ மென்கொல் குறைத்திவண் வந்த தென்றான்.

இங்ஙனம் நினைத்த **சண்டகருமன்,** இரக்கம் அவன் மனத்திற் குடிகொண்டதாயினும், அரசன் கட்டளையை நினைந்து தன் கையாட்களைக்கொண்டு அவ் விருவரையும் கைப்பற்றிக்கொண்டு **சண்டமாரி கோயிலின் வழிமேற் சென்றான்.**

(தொடரும்.)

பத்திராதிபர்.

---

4. அண்டலர் – பகைவர். புண்டரீகத்தின் கொம்பு – திருமகள்.

# சாத்திரப் பகுதி.

## முக்திகோபநிஷத்.

### 2-வது அத்தியாயம்.

அ — கூ. உன்னுடைய வாசனு சமூகமானது சுபமென்றும் அசுபமென்றும் இருவகைப்படும். அவ்விரண்டில் சுத்த வாசனு சமூகத்தினுலே ஆக்கிரமிக்கப்படுவையேயானுல் அந்த நல்ல சம்ஸ்காரத்தினுடைய பரம்பரையினுலே சீக்கிரமாக அந்த எனது முக்தி ஸ்தானத்தை யடைவாய்; அப்படிக்கன்றி, பாப சம்ஸ்காரமே உனக்கு உண்டாயின், அது உன்னைச் சங்கடமான பிறவியிலேயே சேர்க்கின்றது.

வாசனைகள் (பூர்வ ஜன்ம சம்ஸ்காரங்கள்) சுப வாசனையென்றும், அசுப வாசனையென்றும் இரண்டுவிதமாம். அவற்றுள், சுப வாசனு பலத்தினுலே மோக்ஷத்தை விரைவி லடைவாயென்றும், அசுப வாசனை பலமாயிருக்குமானுல் அது துக்க ஜன்மங்களைக் கொடுக்குமென்றும் கூறினுரென்க.

கo. ஓ வானரோத்தமா! உன்னுல் பூர்வ ஜன்மத்திற் செய்யப்பட்ட அசுபமான பாப சம்ஸ்காரங்கள், புண்ணிய சம்ஸ்காரங்களுண்டாக வேண்டுமென்னும் பிரயத்தனத்தினுலே செயிக்கத்தக்கவை. கர்ம வாசனைகளென்னும் ஆருனது புண்ணிய பாப ரூபமான வழிகளால் பிரவகிக்கின்றது.

ஓ ஆஞ்சனேயா! முற்பிறப்பிற் செய்த புண்யாபுண்ய கர்ம வாசனைகளைத் திடமான புருஷார்த்தத்தினுல் செயித்துக் கிருதார்த்தனுகக்கடவாய். கர்ம வாசனு ரூபமான சம்சாரநதி, புண்ய பாப ரூபமான மார்க்கங்களினுலே பிரவகித்துக்கொண்டிருக்கிறது என்ருரென்க.

கக. இந்த வாசனு ரூபமான சம்சாரநதி, புருஷகார ரூபமான பிரயத்தனத்தினுலே நல்ல மார்க்கத்தில் சேர்க்கத்தகுந்தது. துக்க ரூபமான வாசனைகளில் அகப்பட்டுள்ள மனதைச் சுபஸ்தாபிதங்களான கர்மங்களிலேயே பிரவேசிக்கச் செய்யவேண்டும்.

திடமான புருஷ பிரயத்தனத்தினுலே மனதைச் சிரேயஸ்கரமான மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசிக்கச் செய்யவேண்டும். அமங்கலங்களான வாசனைகளிலுள்ள மனதைச் சுகரூபமான சமாதி சாத்விக குணங்களிலேயே புகச்செய்தல்வேண்டு மென்ருரென்க.

மனது சுத்த சத்துவமாய்ப் பிரம்ம சுகத்திற்கு ஆதாரமாயிருத்தலே சுபவாசனையாகும். சம்சார சிந்தையே அசுப வாசனையென்க.

கஉ. மனது மலின வாசனையினால் விடப்பட்டதாய்ச் சுபத்தை யடைகின்றது. அச்சுப வாசனைகளினாலுங்கூட விடப்பட்டதாய் அசுப வாசனையை (சம்சார துக்கத்தை) அடைகின்றது. ஆதலின், புருஷ பிரயத்தனத்தினாலே மனமென்னும் சிசுவை லாலனைசெய்யவேண்டும்.

அசுப சம்ஸ்காரம் ஒழிந்தால் அப்போது மனது சிரேயோ மார்க்கத்தை யடைந்து மோக்ஷ சாதனமான சமாதி குணங்களையடையும். அது அந்தச் சுப சமஸ்காரத்தினின்றும் திரும்பி மலின வாசனைகளினால் பிரேரிதமாய்த் துக்கத்தை யடையும். ஆதலின், சிறுபிள்ளையைத் தாய் தந்தையர்கள் ஜாக்கிரதையாகக் காப்பாற்றினாற்போல, புருஷ பிரயத்தனத்தினாலே சாத்தியமானவரையில் அசுப கர்மங்களிற் போகாமல் இந்த மனதைத் திடமான சமாதிகளினாலே ஜாக்கிரதையாகப் பாதுகாக்கவேண்டும். பிள்ளைக்குச் சஞ்சலத்தை யொழித்து, உபாயமாகத் தாய் தந்தையர்கள் லாலனை தாடனாதிகளால் நல்ல வழிக்குக் கொண்டு வருதல்போல, சமாதிகள், சிரவணாதிகள் முதலிய சுப வாசனைகளால் மனதை நிலைநிறுத்தவேண்டும். இதுவே புருஷ பிரயத்தனம் என்றாரென்க.

கங. உட்பகைவர்களான காமக் குரோதாதிகளை அழித்த ஓ ஆஞ்சனேயா! எப்பொழுது உனக்கு அப்பியாச வசத்தினாலே சீக்கிரமாக, சுப வாசனைகளுடைய உற்பத்தி (மலின வாசனாக்ஷயம்) உண்டாகின்றதோ அப்பொழுது அப்பியாசத்திற்கு ஸாபல்யம் உண்டாயிற்றென்று நீ தெரிந்துகொள்வாயாக.

அப்பியாச பலத்தினாலே உனக்குச் சுப வாசனைகள் எப்பொழுது உதிக்குமோ அப்பொழுது அப்பியாசம் ஸபலமடைந்ததென்று தெரிந்துகொள்க. சுப வாசனாப்பியாசத்தினாலே காமக்குரோதாதி மலின வாசனைகள் நசிக்க, மனது சுத்த சத்துவமாகும். இதுவே ஸபலமென்று கூறினாரென்க.

கச. ஓ வாயு குமாரா! இன்னம் சந்தேகம் தீராதபோது (அனுமானமாக இருக்கும்போது) மிக்க சுப வாசனைகளுடைய அப்பியாசத்தையே நன்றாக ஆசரிக்கவேண்டும். சுபமான வாசனைகள் விருத்தியடைவது தோஷத்தின் பொருட்டன்று.

ஓ ஆஞ்சனேயா! துர்வாசனைகள் நசித்ததென்பது சந்தேகமாக இருந்தால், அச் சந்தேகம் நன்றாக நசிக்கும் வரையில் சுப வாசனைகளை அப்பியசிப்பாயாக. சுப வாசனைகள் பலீயமாதல் தோஷத்தின் பொருட்டல்ல என்றாரென்க. (வரும்.)

ஓர் ஆரியன்.

---

# சுவிவேக தர்ப்பணம்.

(வெண்டாமரை ச, இதழ் க, 23-ம் பக்கத் தொடர்ச்சி.)

பொருள் தனது வீட்டிலேயே பூபதனமாயிருக்க, அது தனக்குத் தெரியாமல் மிகவும் வறுமையடைந்துள்ள ஒருவனுக்கு, அதிருஷ்ட வசமாகத் தனுஞ்சனக்காரன் ஒருவன் காணப்பட்டு அவன் கண்களுக்கு அஞ்சனம்போட, அவன் தனத்தைக் கண்டு சுகமடைவதுபோல, தனக்குத் தெரியாமலே தன்னுள்ளே மறைந்துகிடக்கும் பிரம்ம வித்யா தனத்தை ஒருவன் அடைந்து சுகிப்பதற்கு அவனுக்கு அதைக் காட்ட வல்ல சற்குரு ஒருவர் வேண்டுவது ஆவசிகமாகும்.

மேலும் சர்வ வியாபகனை பகவான் உள்ளும் புறமும் எங்கும் இருக்கிறனென்பது உண்மையேயானலும் அதன் சூக்குமம் இப்படிப் பட்டதென்று தெரிவிப்பதற்கு, சற்குரு ஒருவர் வேண்டியே யிருப்பதால் சிரத்தைகூடச் சாத்தியமாகாது.

சர்வாந்தரியாமியாய்ச் சர்வேச்வரனுய்ச் சகல பிராணிகட்கும் இஷ்டார்த்தங்களைத் தந்து பாதுகாக்கும் பரமேசுவரனைச் சற்பக்தியோடு பூஜிக்கவேண்டுமென்பது மெய்யேயானலும் அதன் உள் மர்மத்தைத் தெரிவிப்பதற்கு ஓர் ஆசாரியர் வேண்டியே யிருப்பதால் கிரியைகூடச் சாத்தியமாகாது.

உசுவாச நிசுவாச ரூபமாக உடம்பில் சஞ்சரிக்கும் பிராண வாயுவைச் சஹஸ்ராரத்துக்கேற்றிச் சோதி தரிசனம் செய்யவேண்டுமென்பது யோகத்திற்குப் பூர்வார்த்தமென்று நிச்சயமானலும் அதன் இரகசியத்தை யறிவிப்பதற்கும், அதற்கு உத்தரார்த்தமுள்ளதென்று தெரிந்தாலும் அதன் இரகசியத்தை யறிவிப்பதற்கும் தேசிகரொருவர் வேண்டியே யிருத்தலின் யோகமும் சாத்தியமாகாது.

தானே பிரம்மம், பிரம்மமே தான் என்னும் அபேத ஞானம் உண்டாகி ஆநந்தமடைய வேண்டுமென்பது நிசமேயானலும், அதன் உள் திறப்புத் தெரிவிப்பதற்குக் காரணசாரியர் ஒருவர் வேண்டியே யிருத்தலின் ஞானமும் சாத்தியமாகாது.

சத்கருமானுஷ்டான பரர்களுக்கே முக்தியென்றும், பக்தி நிஷ்டாபரர்களுக்கே பரமபத கைலாசமென்றும், ஞான நிஷ்டானுவர்த்தகர்கட்கே கைவல்யமென்றும் பலர் பலவிதமாகப் பகராநிற்பர். இவற்றுள் உத்தமமானது இதுவென்று திடமாகத் தெரிந்துகொள்வதற்கேனும் ஒரு ஆசாரியர் வேண்டியதாகவே யிருக்கும். இன்னும் எவ்விதமாகப் பார்க்கினும் ஆசாரியர் வேண்டுவது ஆவசிகமாகவே முடிகிறது.

ஆதலின், சற்குருவைச் சம்பாதித்துக்கொண்டு ஊசியும் நூலும் போலும், பாலும் நீரும்போலும், சரீரமும் நிழலும்போலும் அளவளாவி, குருவினிடத்து விசுவாச பாத்திரர்களா யிருந்தாலல்லது எவ்வளவு புத்திமானுக்காயினும் எத்தனம் கைகூடாதென்று தெரிந்து, குரு வனுக்கிரகத்தை யடைவதற்குச் சத்துவ குணத்தைக் கைக்கொள்ளல் வேண்டும். இந்த மரியாதையை உல்லங்கனம் செய்து தானே பிரம்மத்தைத் தெரிந்துகொள்ளுகிறேனென்று எவன் பிரயத்தனம் செய்வானோ அவன் சாஸ்திர ஜாலமென்னும் சமுத்திரத்தில் மூழ்கி, பகு கிலேசங்கட்குப் பாத்திரனாவனே யன்றி ஒருநாளும் கரையேறமாட்டான்.

(வரும்.)

பத்திராதிபர்.

---

# புத்தக வரவு.

## குமரவேள் மும்மணிக்கோவை.

இது உயர்ந்த தமிழ் நடையி லமைந்து தமிழ் மணம் நிரம்பிய ஓர் சிறு நூல். இதில் பல துறைப் பொருள்கள் விளங்க, அன்பூற்றெடுப்ப, பேரின்பச் சுவை பெரிதும் தோன்ற, சொல்வனப்பும் பொருள்வளனும் நோக்குமிடந்தொறுங் கிடந்து களிப்புச் செய்கின்றன. சுருங்கச்சொல்லின், தமிழ் பயில்பவர்கட்கு இது இலக்கியமாகவும், இலக்கணமாகவும், பத்தி நூலாகவும், முத்தி நூலாகவும் அமைந்துள்ளதென்னலாம்.

இதனை யாக்கியோர், சிதம்பரம் காலேச் சந்திகட்டளை ஸ்ரீமான் வே. தில்லைநாயக முதலியாரவர்கள். இவர்களது புலமைத் திறத்தையும் பேரின்ப விருப்பையும், இவர்க ளியற்றிய இந்நூலே எடுத்துக் காட்டுகின்றது. சீகாழி L. M. C. ஹைஸ்கூல் பண்டிதர் ஸ்ரீமான் இராஜாப்பிள்ளை யவர்கள் எழுதிய அருங் குறிப்புரையொன்று, இந் நூலினிறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. இந்நூல் உரையோடு வெளிவரின், அது தமிழ் மக்கள் பலர்க்கும் பெரிதும் பயன்றருவதாகும். கூடிய விரைவில் அவ்வாறே வருமென்றும் நம்புகின்றேம்.

அன்புகூர்ந்து இதனை நமக்கனுப்பிய இந்நூலாசிரியர்க்கு, நமது மனப்பூர்வமான நன்றியை யனுப்புகின்றோம். ப-ர்.

---